*Private schools in Madurai*

* 859 Q.—Sri N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) மதுரை முனிசிபல் டவுன் லிமிட்டில் எத்தனை தனியார் மானேஜ்மெண்டு பள்ளிகள் மூடப்போவதாக நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள் ?

(ஆ) அவைகளில் எத்தனை பள்ளிகளை முனிசிபாலிடியார் எடுத்துக்கொண்டார்கள் ?

(இ) தனியார் பள்ளியாசிரியர்களை ஸ்தலஸ்தாபன நிர்வாகத்தில் எடுத்துக் கொண்டால், அவர்களுடைய சர்வீஸ், பிராவிடெண்டு பண்டு முதலியவைகள் சேர்த்துக் கொள்ளப் படுமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (a) to (c) The particulars required have been called for.

Mr. SPEAKER : கனம் அமைச்சர் அவர்களின் வேண்டு கோளின்படி 860-ம் நம்பர் கேள்வி ஒத்தி போடப்பட்டிருக்கிறது.

*Vacation salary for teachers*

* 861 Q.—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether any action has been taken to give vacation salary to teachers employed in private schools ?

The Hon. Sri C. SUBRAMANIAM : The grant of vacation salary of teachers in secondary schools under private management is to be regulated in accordance with the terms of agreement entered into by the teachers with management. In the case of Elementary Schools under private management, the grant of vacation salary to teachers will be governed by the terms of the service register issued to the teachers by the District Educational Officer.

Sri N. K. PALANISAMI : ஸார், பிரைவேட் மானேஜ் மென்டின்கீழ் இருக்கின்ற பள்ளிக்கூடங்களில் 10 வருடம் 15 வருடம் என்று வேலை பார்த்தபின்னாலும் கூட ஆசிரியர்களை பெர்மனென்ட்டாக்குவது கிடையாது. டெம்பரரியாகவே வைத்துக்கொண்டு ஏப்ரல் மாதம் பிரித்துவிடுவதும் பின்னால் ஜூன் மாதத்தில் சேர்ந்துகொள்வதுமாக இருக்கிறது. இதன் காரணமாக ஆசிரியர்களுக்கு இரண்டு மாதம் சம்பளம் கிடைப்பதில்லை. ஆகவே இம்மாதிரிப்பட்டவர்களை உடனடியாக பெர்மணன்ட் செய்யவேண்டும் என்று சர்க்கார் உத்தரவு பிறப்பிப்பார்களா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இப்போது இருக்கிற உத்தரவின் பிரகாரம் ஒரு ஆசிரியர் ஒரு பள்ளிக்கூடத்தின் கடைசி நாள் வேலை செய்திருந்தாலும்கூட அதை அடுத்து வருகின்ற வெக்கேஷனுக்கு சம்பளம் கொடுக்கவேண்டும் என்று இருக்கிறது. இதை படித்த ஆசிரியர்களே பயன்படுத்திக்கொள்ள வில்லையென்றால் நாம் என்ன செய்யமுடியும் ?